உ
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்

# முத்தமிழ்ச் செல்வராகிய மாணிக்கவாசகர்
# காலவாராய்ச்சி.

தமிழருள் மிகவும் பழையகாலத்துத் தோன்றினவரும் பழைய தமிழர்களது முத்தமிழ்த்தழுவிய அரிய பாடல்களைப் புனைந்தவருமாகிய மாணிக்கவாசகரைக் குறித்து உரை எழுவது அக்காலத்து வழங்கிய தமிழ் நூல்கள் பலவற்றினை இலக்கணவமைதியோடு சுற்றுத் தெளிந்தவர்க்கே அருமையென்றால், என் போன்ற புல்லறிவீனர் அத்தகைய அருந்திறற் சைவத்தமிழ் மேதாவியரின் செய்தியைக் கூறுதல் அறியாமையேயாம்.

அஃதன்றியும், தமிழர்களினது செய்திகளைக் கூறுவதற்கு முக் கிய கருவிகளாகப்போந்த அரியபெரிய செந்தமிழ் நூல்கள் இறந்து சில சூத்திரங்கள் உரைகளிலும் தனித்தும் வழங்குகின்றன. தமிழர்களது ஒழுக்க வழக்கங்களைக்கூறும் அரிய நூல்களுள் இக்காலத்தும் அழிவின்றிக் கிடைக்கு முழுநூல்களாய் உள்ளது “தொல்காப்பியம்”; “இறையனார் அகப்பொருள்” என்கிற இரண்டு நூல்களேயாம். மற்றைய அகத்தியம், மாராணம், பூதபுராணம், அவிநயம், இளந்திரையம் முதலியன இறந்து இன்னும் சில சூத்திரங்கள் மாத்திரம் நடைபெற்று வழங்கி வருகின்றன. நிற்க, தமிழுக்கு ஆரியவழக்குகளாகிய யுகக்கணக்குகள் கிடையா. அவைகளைத் தழுவிச் சில தமிழ் நூல்களில் எழுதப்பட்டாலும் அவை பொருத்தமுறாது மயங்கும் என்க. அப்படி எழுதினவும் பிற்காலத்தினவேயாம். இறையனார் அகப்பொருள் உரையின் பாயிரத்து மூன்று சங்ககாலங்களையும் காட்டுமிடத்து யாண்டினை மாத்திரம் குறிக்கின்றனர். இற்றைக்கு 1100 யாண்டு கட்கு முன்னிருந்த அடியார்க்கு நல்லார் முதலூழியிற் தலைச்சங்கத்தையும், இரண்டாவது ஊழியில் இடைச்சங்கத்தையும் குறிக்கின்றனர். இடைச்சங்கத்துக் கடல் கொண்டு போந்திருந்த முடத்திருமாறனே கடைச்சங்கம் தோற்றிவித்தபடியால் அதனை மூன்றாவது ஊழியில் என்று கூறின், யுகக்கூறுபாட்டளவைக்கு மாறுபடுமென்று மயங்கினர் போலும். ஆயினும் தற்காலத்து உள்ள வட நாட்டுமேதாவிகளும் யுகங்களைப்பற்றி வேதாங்க சோதிடநூல், சூரிய சித்தாந்தம், வராகமிசிரர் பஞ்ச சித்தாந்தம் முதலிய நூல்களில் யுகங்கள் கூறப் படாமையைத்தழுவி அவைகளைப் பிற்காலத்தவர்கள் கட்டியதென்று ஒப்பு கொள்கின்றனர். கடைச்சங்கம் தோன்றிய காலத்தில் தோற்றிய வேதவியாதர் தாம் எழுதிய புராணங்களில் யுகங்களை வகுத்துக் கூறியிருக்கின்றனர். அவர் கூறியவாறு வேதாங்கச்சோதிடம், சூரிய சித்தாந்தம், வராமிசிரர் பஞ்சசித்தாந்தம் முதலியன யுகவளவைக் குறைத்து மாறாகக் குறிக்கின்றனர். 1906 - வது ஆங்கிலவாண்டில் பிரசுரமான ஆஜ்மீரில் உள்ள" ஹார்பிலாஸ் சாரதா என்னும் மேதா வியால் வெளியிடப்பட்ட இந்து சுபீரியாரடி (Hidu Superiority) என்னும் நூலில் கூட இப்போழ்து கடந்திருக்கின்ற கலியுகம் 5016

யாண்டுகளை ஒப்புக்கொள்ளப் படுகின்றது. அக்கலியுகம் 5016 யாண்டுகட்கு முன்னரே கடைச்சங்கம் தோன்றிக்கலியுகம் 2000 யாண்டுகள் வரை நடைபெற்று வந்தது. முதன் முதல் சங்கச்செய்தியைக் கூறி யிருக்கின்ற அகப்பொருள் உரைப்பாயிரத்து 850 யாண்டுகளே குறித்திருக்கின்றன என்பார்க்கு அச்சங்கம் புத்தர் காலத்தும் கண்ணகியார் காலத்தும், பலவற்கடகாலத்தும் இல்லாமையும் வேறு நூல்களுள 1950, 2000 என்று கூறப்படுவதாலும் என்க. நம்சிவ பெரு மானே தலைச்சங்கத்துத் தலைமைப்புலவனாக விருந்து தமிழாய்ந்தும் இடைச்சங்கத்துப் பாண்டியனாகிச் சங்கப்புலவரைப் போற்றியும் கடைச்சங்கத்து வேற்றுப்புலவனைப் போன்றுவந்து சங்கத்தார் மயக்கு ஒழிந்தமையினாலும் அச்சங்கப்பெருமையை எம்மால் கூறத்தர மன்று. இதனை வியந்து சமயகுரவர்களும் சிற்சில குறிப்புகள் காட்டியிருக்கின்றனர். இப்போழ்து எழுதப்பட்டு வருகின்ற தொண்டை மண்டல வரலாற்றுள் பல யாண்டுகளாய்ப் பழைய நூல்களையும் கல் வெட்டுகளையும் கொண்டு நுனித்து ஆராய்ச்சி செய்த முறையில் 2800 ஆண்டுகட்கு - முன்னிருந்தவர் என்று ஏற்படுகின்றவராகிய சுந்தரமூர்த்தி நாயனாரும் ஷை சங்கப்புலவர்களைத் தமது திருத்தொண்டத் தொகையில் பொய்யடிமையில்லாத புலவர்க்கு மடியேன் என்று சொல்லியிருக்கின்ற படியினாலும், அரும்பெறல் தமிழ்க்கடவுளாகிய கந்தழி என்று பண்டைய தமிழ் ஒத்துகளுள் கூறப்பட்டிருக்கின்ற என. சிவபெருமானையும் அவ்வக்காலத்து நிகழும் உண்மைச் செய்திகளையுமே பாடிப் பெருமையடைந்தவர்கள் என்பயாம் பலநாடுகளில் உள்ள ஆலயங்களின் கல்வெட்டுகளைப் பார்த்தபோழ்து விளங்கிய சில செய்திகளுள் முக்கிய மானவை. திருமுறை கண்ட சோழன் காலம் இற்றைக்கு ஆயிரத்து ஐந்நூறுயாண்டுகள் ஆயின. அவன் காலத்தினுக்குப்பிற்பட்ட கோயில் சாசனங்கள் பலவற்றுள்ளும் அவ் வக்கால வரசர்கள் பேர் இட்டெழுதியிருக்கின்ற செய்திகளுள் திருப் பதியம் விண்ணப்பஞ் செய்வார் நால்வருக்கு நெல் குறுணி எனவும். திருப்பதியம்பாடும் திருமேனிகள் இருவர் எனவும், திருப்பதியம் விண்ணப்பஞ் செய்யும் சைவர் நால்வர் எனவும், பதியம்பாடும் சைவ மாஹேஸ்வரர் நால்வர் எனவும் கூறப்பட்டிருக்கின்றன. இஃதன்றி யும் தொண்டை மண்டலத்துக் காலியூர்க்கோட்டத்துக்காழியூர் நாட்டு திருவோத்தூர் உடைய நாயனாருக்கு நாலாவது திருநாளில் திருப்பதி யம் பாடுவார் ஒரு சைவருக்குக் குதிரைச்சேவகன் தாங்கல் என்கிற ஊரைக் கொடுத்திருக்கின்ற தாகவும் காட்டப்பட் டிருக்கின்றது. இம்மாதிரி கல்வெட்டுகள் பல உள்ளன. அம்மாதிரி 1500 யாண்டு கட்கு உள்ளாக இருக்கின்ற சைவக்கோயில்களுள் திருப்பதியம் விண் ணப்பஞ் செய்வதற்காகப் பல சைவ வோ துவார்களை நியமித்திருந்த மையை நோக்குமிடத்து ஆயிரத்து ஐந்தாறு யாண்டுமுன்னர் இராஜ ராஜசோழன் காலத்துத் திருமுறையை அதற்குமுன் சிதறுண்டு ஒவ் வோர் தலங்களுள் அவ்வவ்வூர் பதிகமே வழங்கி வந்திருந்தது நீங்கி, நம்பியாண்டர் நம்பியின் திருவருளால் இப்போழ்து உள்ள பெரும் பாகம் கிடைக்கப்பட்டன வென்று தோன்றுகின்றது. தொண்டத் தொகையில் சுந்தரமூர்த்தி நாயனாரால் மாணிக்கவாசகரைப் பாடாது விட்டமையால் அச்சுந்தரமூர்த்திகளது காலத்திற்குப் பிற்பட்டவர் என்பது பலபேருடைய கோட்பாடு எனப்பலர் பத்திரிகைகளில் எழுதுகின்ற வியாசங்களால் நமக்கு விளங்குகின்றன.

இன்னும் 1500 ஆண்டுகளுக்கு முன்னிருந்த திருவிசைப்பா பாடிய ஒன்பதின் மருள் ஒருவராகிய பூந்துருத்தி நம்பிகாடநம்பி என்பாரால் மேற்படி திருவிசைப்பாவில் தில்லையாகிய கோயிலுக்குப் பாடிய செவ்வழியாழின் திறனாகிய சாளரப்பாணி என்கின்ற இசை அமைந்த இசைப்பா பத்தினுள் 2 - 3 - 4 - என்களுள்ள யாட்டின் கணம்புல்லர், கண்ணப்பரையும், ஆரூர் நாவுக் கரைசையும், சம்பந்தர்காழியர் கோனையும், சேரமானா ரூபரையும் குறித்துப் பாடியவர் ஷை மாணிக்கவாசகரைப் பாடாது விட்டமையால் அவர்கள் காலத்துக்குப் பின்னவர் என்று அவரைக் கூறுதல் அமையாதென்க.

இனி மாணிக்க வாசகரைப் பன்னிரு திருமுறையிலுள்ளும் பாடியுள்ளவர் இருவர் என்க. அவர்களுள் திருநாவுக்கரசு சுந்தரமூர் தியாருக்கு முந்தி எழு நூறு யாண்டுகட்கு முன்னுள்ள வரென்க. பட் டின தடிகள் சுமார் இற்றைக்கு 2000 யாண்டுகட்கு முந்தி யிருந்தவர் அவர் காலம் திருநீற்று வியாதக சோழன் காலம் என்ப.

இப்படிக்கு
திரு - சுப்பிரமணிய தேசிகன்.
சிலாசாசன பரிசோதர்.

சித்தாந்தம் - 1915 ஹு - மார்ச்சு மீ